# திருநெல்லை

33


சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக
அறநிலை சார்பில் நடைபெறும் ஒளிப்பதிவு
ஒளிப்பதிவுப் பயிற்சி முகாமை இயக்குநர்
B. லெனின், ஒளிப்பதிவாளர் B. கண்ணன்.
ஆன்மீகத் திங்களிதழ்
ஜய - பங்குனி - 2015 - மார்ச்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - பங்குனி - 2015 - மார்ச்    இதழ் - 33

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

கொழிபுனல் கங்கை குடுமியில் வைத்த்
கொற்ற வாளீசர் கோயிலின் கீழ்பால்
கோலத் தாமரைக் குளிதேன் உண்டு
கொட்புறு வண்டினம் பெட்புற ஆர்க்கும்

எழில்மதுப் பொய்கை இறங்கிநீர் ஆடி
எழுந்தனர் முனிவர் தொழுதகை யோடு
இப்படிக் கெல்லாம் தான்படி அளக்கும்
இறைவன் சமிவனத் தீசனைப் போற்றிப்

பழகிய பிறவிப் பந்தம தறுக்கும்
பாவனை கண்டு சேர்தவ ஞானி
பரமனுக் குகந்த திறலுடை வேதப்
பரம்பரை வளர உளமது கொண்டு

தொழுதனர் ஞானத் துறவியர் பலரும்
தூக்கிய திருவடித் துணைப்பதம் போற்றித்
தயங்கொளி நெல்லைத் தாய்முகம் கண்டு
துதித்தனர் நாமும் துதித்திடு வோமே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

சுயநலத்தைக் குறைத்துக் கொள்வது, சுயநலத்தைக் குறைத்துப் பொதுநலச் சிந்தனை ஏற்படுவது மிக்க அவசியம். முழுக்க சுயநலத்தை விடுவது என்பது துறவிகளாலும் முற்றிலுமாக நிறைவேற்ற முடியாத காரியம். பக்குவம் பெற்ற ஞானிகளே தங்களைப் பற்றிய சிந்தனையோ, விருப்பு வெறுப்புக்களோ, வேண்டுதலோ இல்லாதவர்களாக ஆக முடியும். எனவே சாதாரண மக்கள் சுயநலத்தைச் சிறிதளவாவது ஒதுக்கி அடுத்தவர்களுக்கும் உதவுகிற பண்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். பசித்தவன் பார்த்திருக்கப் புசிப்பவன் மனிதரில் சேர்த்தியில்லை. உண்ணும் உணவிலே ஒருபிடி சோறு பகிர்ந்து கொள்வது தியாகமல்ல; அவசியமான பண்பு. இதனைத்தான் திருமூலர் "யாருக்கும் எளிதாம் கைப்பிடி என்கிறார்" இதனைத்தான் வள்ளுவர் அழுத்தமாக வலியுறுத்துகிறார்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை"

"அள்ளிக்கொடுக்க முடியாதவர்கள் கிள்ளிக் கொடுப்பார்கள்" என்பது உளவியல் வழக்கு. தவித்த வாய்க்குத் தண்ணீர் கொடுப்பது மனிதப்பண்பு. எனவே, அடுத்தவர் துயரத்திலும் நம்மால் இயன்ற அளவு உதவி செய்ய வேண்டும். இந்தப் பழக்கத்தைக் குழந்தைப் பருவத்திலேயே பழக்க வேண்டும். பகிர்ந்து கொள்ளும் பழக்கம் இல்லாதவர்கள் பண்பாளர்களாக வளர்வது என்பது இயலாத காரியம்.

அண்மையில் ஒரு செய்தி மிகவும் மகிழ்வு அளித்தது. கர்நூல்(தெலுங்கானா) பகுதியிலே உள்ள ஸ்ரீ ராம கிருஷ்ண வித்யாலயா என்ற பள்ளியின் பழைய மாணவர்கள் கூடித்தங்களுடைய பழைய நினைவுகளைப்பகிர்ந்து கொள்ள எண்ணித் திட்டமிட்டுள்ளார்கள். 1983ஆம் ஆண்டு படித்த 125 மாணவர்களைக் கூட்ட முயற்சி தொடங்கி நடந்திருக்கிறது.

அது சமயம் 8 பேர் இறந்திருப்பதும் 3 பேர் வறுமையில் வாடுவதும் அறியப்பட்டிருக்கிறது. அனீப் என்பவர் படிக்கின்ற காலத்திலே முதல் மாணாக்கராக இருந்திருக்கிறார். இளமையிலே தந்தையின் மறைவாலே படிப்பைப் பாதியில் நிறுத்திக் குடும்ப வியாபாரத்தை நடத்தியிருக்கிறார். அதில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகள் காரணமாகச் செல்வத்தை இழந்து தற்போது கருநூல்(தெலுங்கான) பேருந்து நிலையத்தில் தள்ளுவண்டியில் பழ வியாபாரம் செய்திருக்கிறார். இதனைக் கண்டறிந்து அவருடைய வகுப்புத் தோழர்கள், தங்களில் ஒருவர் நடத்துகின்ற தொழில்களில் வணிக மேலாளராக நியமித்து இருக்கிறார்கள். அவர்கள் கடன்களையும் தோழர்கள், கூடி அடைத்திருக்கிறார்கள்.

அதே போல நாகராஜ் என்னும் நண்பர் ஒருவர் ரூபாய் 1 லட்சம் உதவி செய்து அவரை மீட்டெடுத்து இருக்கிறார். மற்றொன்று இறந்து போன பிரபாகரன் என்னும் நண்பர் குடும்பத்திற்கு நிரந்தர வருவாய்க்காக 5 ஏக்கர் நிலம் வாங்கிக் கொடுத்திருக்கிறார். இப்படித் தாங்கள் வளர்ந்த நிலையிலேயே சிரமப்படும் தங்களுடைய நண்பர்களுக்கு உதவுகின்ற வகையிலே எல்லாப் பழைய மாணவர் சங்கங்களும், மற்றைய அமைப்புகளும் முன்வர வேண்டும். தமிழ்நாட்டில் பல கல்லூரிப் பழைய மாணவர்கள் கூடித்தாங்கள் கல்வி கற்ற நிறுவனத்திற்குக் கொடை கொடுத்துப் புதிய கட்டிடம் /வகுப்புத் தொடங்க உதவுவது எங்கும் நடப்பதே.

இப்படி இருப்பவர்கள் இல்லாதவர்களுக்குக் கல்வி தானம் போலப் பொருள் தானமும் செய்தால் சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பது சாத்தியமாகும்.

***ஆசிர்வாதங்கள்***

தவத்திரு குமார தேவர் அருளிய

## மகாராஜா துறவு (தொடர்ச்சி)

59. பந்தம்வீடு என்றும் இல்லை
பரம்பொருள் ஒன்றே என்றும்
தம்தம்சங் கற்பத் தாலே
சாலமோ கிப்பர் தீயோர்
அந்தம்ஆ திகளும் இல்லா
அரும்பொருள் தாமே என்று
சந்ததம் நோக்கி அந்தத்
தற்பரம் தானே ஆனான்.

அஞ்ஞானியானவன் தானே பிரம்ம வடிவமாக இருப்பதை அறியாதபடியால் உலகம் பந்தம் என்று மயங்குவதும், பிறகு பந்தங்களைத் துறந்து வீடு பேறடைய வேண்டுமே என மிகவும் மயங்குவர். மகாராசன் முதலும் முடிவும் இல்லாத அரிய பொருள் தாமே என்று தினமும் எண்ணித் தானே அந்தப் பரம்பொருள் ஆனான்.

60. குறைவுஇலா நிறைவுஅது ஆகிக்
குளிர்ந்துஇளைப்பு ஆறி வேந்தன்
இறைஅள வேனும் துன்பம்
இன்றியே இன்பம் ஆகி
உறைவிடம் இன்னது என்ன
ஓர்இடம் இன்றி எங்கும்
நிறைவதே இடமாய் நின்றான்
நிகர்இல்மா ராசன் தானே.

ஒப்புவமை இல்லாத மகாராசன் என்னும் அந்த அரசன் குறைவு என்பதே சிறிதும் இல்லாத நிறைந்த மனத்தினனாகி உள்ளம் குளிர்ந்து அமைதி அடைந்தான். மனம் இன்பம் இருக்கும் இடத்தைத் தேடித் தேடி அலையாமல் எல்லா இடங்களிலும் பரவியுள்ள பரபிரம்ம சொரூபமாகி பேரின்ப வடிவானான். (சீவன் முத்தி அடைந்தான் என்பது கருத்து)

61. எங்கும்ஆய் நிறைந்து நின்ற
ஏகராச்சி யம்அது ஆள்வோன்
தங்குதல் இன்றி எங்கும்
தான்எனக் கண்ட தூயோன்
இங்கு உறைந்து அகன்ற பாண்டத்து
இயல்பின்நெஞ்ச அருவம் பற்றி
அங்குஉரு அகற்றி நின்றான்
ஆனந்தி ஆகி வேந்தன்.

மகாராசன் எங்கும் பரந்து விரிந்து நிறைந்துள்ள ஒரே பரப்பிரம்மமாக விளங்கும் ராச்சியத்தையே ஆளத்தொடங்கிவிட்டான். எவ்விடமும் எப்பொருளும் தனது வடிவமான ஆத்ம சொரூபமே என்று ஐயம் அற உணர்ந்த தூயவன் ஆனான். இரஜோ தமோ குணங்கள் நீங்கி சத்துவ குணமே மேலிட்டு ஆனந்த வடிவம் ஆனான். பெருங்காயம் வைத்திருந்த பாத்திரத்தில் பெருங்காயத்தை எடுத்தபிறகும் அதன் மணம் இருப்பதுபோல, முக்குணங்களால் ஆன மனது இரஜோ தமோ குணங்கள் விட்டதால், மனம் சத்துவமாய் ஆனதால் ஆனந்தமாக இருந்தான்.

62. சீவன்முத்தர் கள்பால் நிற்கும்
செப்பிய மனத்து அரூபம்
மேவுஅரும் பரம முத்தி
மேவிடின் நாசம் ஆகும்
தாவுஅரும் நிலைமை நன்றாச்
சற்குரு அருளால் பெற்றுக்
கேவலம் ஆகி நின்றான்
கேடுஇலா ஞான வேந்தன்.

மேலே சொல்லிய, உருவம் அற்ற, சத்துவ குணம் மேலிட்ட மனம் சீவன் முத்தர்களிடம் நிலைபெற்று இருக்கும். அடைதற்கு அரிய வீட்டுலகம் அடைந்தால் அந்த உருவமற்ற மனமும் ஒடுங்கும். சற்குருவின் அருளால் அலைபாயும் மனம் ஒடுங்கிக் குற்றங்குறை இல்லாத ஞான நாட்டம் கொண்ட வேந்தன் ஒரே பரம்பொருள் ஆகி

நின்றான். (அருவ மனம் சத்துவ குணம் மட்டுமே மேலிட்டுள்ள நிலை.) (இங்கு=பெருங்காயம்)

## இப்படி இருந்த மகாராசனின் அமைச்சரில் ஒருவன் அவனிடம் சென்று அவன் அடைந்திருந்த நிலையைக் கண்டு பேசுதல்

63. இத்தகை ஞானம் பெற்றே எழில்முனி ஆகி எங்கும்
சித்தனாய்த் திரிதல் தன்னைச் செப்புமுன் அமைச்சர் தம்முள்
வித்தகன் ஒருவன் கேட்டு வினவிட வேண்டும் என்றே
கத்தனாம் அரசைத் தேடிக் கண்டுஅடி பணிந்து நின்றான்.

இத்தகைய ஆத்ம ஞானத்துடன் அழகிய முனிவனாய், எல்லாம் சித்திக்கப் பெற்றவனாய் உலாவி வரும் அரசனைப் பற்றி அவனுடைய அமைச்சர்களுக்குள் மிக அறிவுடையவனாய் இருந்த ஒருவன் கேள்விப்பட்டான். அவ்வரசனை நேரில்கண்டு சில வினாக்களைக் கேட்க வேண்டும் என்று எண்ணித் தன் தலைவனாகிய அவ்வேந்தனைத் தேடிக் கண்டு அவன் பாதம் வணங்கி நின்றான்.

64. பூஅணை ஆகி வானம்பொருந்துமேல் கட்டி ஆகித்
தீவம்அது ஆகி இந்து செங்கதிர் வீசும் காற்று
மேவுசா மரம்அது ஆகி விடுதலை மனைவி ஆகிக்
கேவலம் இன்பம் ஆகிக் கிளர்ச்சியாய் நின்றான் வேந்தன்.

பூமியே மெத்தையாகவும், வானமே கட்டிலின் விதானமாகவும், சந்திரனும், சூரியனும் விளக்குகளாகவும், இயற்கையாய் வீசும் காற்று கவரி ஆகவும், எல்லாப் பற்றுக்களையும் விடுகின்ற குணமே மனைவியாகவும் கொண்டு ஏக வடிவுடன் பேரின்பத்தில் திளைத்து இருந்தான் அவ்வரசன்.

65. ரதம்முதல் சேனை சூழ ரத்னசிங் காச னத்தில்
விதம்அலங் காரத் தோடு வீற்றிருந்து அமரும் வேந்தன்
உதவுகோ வணனாய் மேனி உருத்தெரி யாத நீறாய்
முதல்முடி விரித்து நின்றான் முனிவனாய் ஒருவன் ஆகி.

தேர் முதலான நால்வகைச் சேனைகள் சூழ்ந்து இருக்க, இரத்தின சிம்மாசனத்தில் பலவித அலங்காரங்களோடு வீற்றிருந்து ஆண்ட அரசன், கோவணம் கட்டியவனாய், இன்னாரென்று அடையாளம் காண இயலாத உருவுடன் மேனி எங்கும் நீறு பூசித் தலைமுடியை விரித்தவாறு முனிவர் கோலத்தில் நின்றான்.

66. கரிரதம் இவர்தல் இன்றிக் கால்நடை ஆகி எங்கும்
உரியது ஓர் மனைஊண் இன்றி ஊர்எங்கும் உண்பான் ஆகி
அரியரா சாங்கக் கோலம்அகற்றியே தவாங்கம் ஆகித்
திரியும்அவ் அரசை நோக்கிச் செப்பினன் அமைச்சன் தானே.

யானை, தேர் முதலியவற்றில் ஏறாமல் எங்கும் கால் நடையாகவே சென்று, தனக்கு உரிய உணவை ஒரே வீட்டில் வாங்கி உண்ணாமல் ஊர் எங்கும் பிச்சை எடுத்து உண்பவனாகி, அரிதான அரச கோலங்களை நீக்கித் தவக்கோலமே தனக்குரிய அங்கமாய்க் கொண்டு திரியும் அந்த அரசனை அமைச்சன் கண்டு சில சொற்களைச் சொன்னான்.

67. அவனியில் நினக்கு மேல்ஓர் அரசனும் இல்லை இந்தத்
தவவடிவு ஆகி எங்கும் சரித்திடல் எற்றி னுக்கோ
நவமதாய் உடல்இ தோடே நண்ணுவது எனைஈது அன்றி
இவண்எனக்கு அருள வேண்டும் எனக்குஅறிவு ஓங்கு மாறே.

“உலகிலே உனக்கு மேலான அரசன் ஒருவரும் இலன். அப்படிப்பட்ட நீ அரசாட்சியை விட்டுவிட்டு, இத்தவ வேடத்தை ஏற்று எங்கும் சென்று உலவி வருவது எதற்காகவோ? இத்தவ வேடம் ஏற்ற உடம்பால் இவ்வரச போகத்தை அன்றிப் புதிதாக நீ அடைவதற்கு என்ன இருக்கின்றது? எனக்கு அறிவு தெளிவடையுமாறு கூறி அருள வேண்டும்.”

68. பதத்தினை வேண்டின் முன்னம் பற்றிநின்று இல்ல றத்தைப்
பதப்பட நிறுத்தி ஏகல் பண்பதாம் மேலாம் முத்திப்
பதத்தைவேண் டிடிலோ ஞானப் பார்வையில் கூடும் நீஎப்
பதத்தினை வேண்டி இந்தப் பரதேசி ஆனது என்றான்.

சொர்க்க பதவியை விரும்பினால் முதலில் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு அவ்வறத்தை அழகுடன் நிலைபெறச் செய்ய வேண்டும். எல்லாப் பதவிகளிலும் மேலாகிய வீடுபேறு என்னும் பதவியை அடைய விரும்பினால் தத்துவ ஞானத்தால் உண்டாகும் ஆத்ம ஞான தரிசனத்தால் அது கைகூடும். இவ்விரண்டிற்கும் பரதேசிக் கோலம் தேவை இல்லை. அப்படி இருக்க நீ எப்பதத்தினை வேண்டி இந்தப்பரதேசிக் கோலம் கொண்டாய் (தவாங்கம்=தவ+அங்கம்=தவ வடிவம்) என்று வினவினான். (அரசன் பரதேசியாய்த் திரிவது மந்திரிக்குத் துக்கம் அளிக்கிறது. அந்த ஆதங்கத்தினால் கூறினான்.)

**மந்திரியின் வினாவிற்கு மகாராசன் விடை கூறுதல்**

69. **அமைவுஉடை அமைச்சின் மிக்கோய் அடைவுடன் வினவிக் கேட்டாய்**
**இமைஅள வேனும் சித்தம் இதுஅது எனஓ டாது**
**சமைவுடன் கேள்நீ சொன்ன சங்கைக்குஉத் தரங்கள் நன்றாய்**
**நமைவிட வேறுஓர் வேந்து நாட்டுஇலை என்பது ஒக்கும்.**

"நல்குணம் பொருந்திய அமைச்சனே! நீ முறையோடு கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவைகளைக் கேட்டாய். நீ கேட்ட ஐய வினாக்களுக்கு உரிய விடைகளை நான் நன்றாகச் சொல்லுகிறேன். இமை அளவேனும் அது இது என மனத்தை உலகச் செய்திகள்பால் ஓட விடாது. பொறுமையுடன் கேள். நம்மைக் காட்டிலும் வேறு ஓர் அரசன் இந்த நாட்டிலே இல்லை என்று நீ கூறுவது பொருந்தும்".

70. **பதமதை வேண்டின் இல்லைப் பதப்பட நிறுத்தி ஏகல்**
**இதம்என்றல் ஒக்கும் முத்தி எய்துதல் ஞானப் பார்வை**
**விதம் அதில் தோன்றும் என்றாய் விருப்பமாய்க் குடும்ப பாரத்து**
**இதமதாய் அழுந்து வோருக்கு எங்ஙனம் பார்வை தோன்றும்.**

"சொர்க்கம் முதலிய பதவிகளை அடைய விரும்பினால் இல்லறத்தை முறைப்படி நிலைபெறச் செய்து நல்வழியில் செல்லுதல் நன்மை என்று நீ சொல்லுதல் பொருந்தும். தெளிந்த ஞானம் பெற்றால் வீடு பேறு அடையலாம் என்று நீ கூறினாய். குடும்பச் சுமையில் விருப்பம் கொண்டு அதிலேயே மூழ்கிக் கிடப்பவனுக்கு, ஞானப் பார்வை எங்ஙனம் தோன்றும்?"

71. மனம்இரு பொருளைப் பற்ற மாட்டாது அட்டாவ தான
இனம்அவை புறநோக்கு ஆன ஏதினால் கூடும் வீடு
கனம்உள்நோக்கு ஆகும் இல்லம் கருதிய புறநோக்கு ஆகும்
அனகஇவ் ஊகம் தோன்ற அறைகுவம் நாமே கேளாய்.

"மனமானது, சுவை ஒளி ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து புலன்களில் ஒன்றில் மாத்திரமே செல்லும், ஒரு காலத்தில் ஒன்றை மட்டுமே நினைக்கும். இரண்டை நினைக்காது. எனினும் எட்டுச் செயல்களை ஒரே சமயத்தில் மனம் கவனிக்கும், அட்டாவதானம் என்னும் கலை புலவர்களால் உலகில் நடைபெறுகின்றது. அதனைக் கண்டு நீ எட்டுச் செயல்கள் இப்படி ஒரே நேரத்தில் கவனிக்கப் படுகின்றனவே என்று ஐயப்படுகின்றாய். எட்டு நினைவுக் கூட்டங்களும் ஒரே சமயத்தில் வெகுவாக நடைபெறும். விரைவாக அடுத்தடுத்து நிகழ்வதால் ஒரே காலத்தில் நிகழ்வதாகத் தோன்றுகிறது. வீடுபேறானது உறுதியான உள்நோக்கத்தால் விளங்குவது. இல்லறம் வெளி நோக்கத்தால் விளங்குவது. இவ்விரண்டு நோக்கங்களும் நன்கு விளங்குமாறு தூயதான வழிமுறையை நாம் கூறுவோம் கேட்பாயாக."

72. தென்திசை நடப்போர் கங்கை சென்றுதோய்ந் திடுவ ரோதான்
அன்றியும் அவனி வாழ்க்கைக்கு அமைச்சர்க ளுடன்ஏ காந்தம்
ஒன்றியே யூகம் செய்வோர் உலகவேந்து ஆயி னோர்கள்
நின்றுஇதை நோக்காய் இல்லில் நிற்பவர் முத்தி சேரார்.

"வடதிசையை நோக்கிச் செல்லாமல் தென்திசையை நோக்கிச் சென்றவர் கங்கையில் மூழ்குவாரோ? இதைப்போல் வீடுபேறு அடைவதற்கு உள்நோக்கமாகிய ஞான நெறி வேண்டும். புற நோக்கில் சென்றால் கிடைப்பது அரிது. அன்றியும் உலகாளும் மன்னராய் இருப்போர், தம் ஆட்சிக்கு உட்பட்டோர் பகை, பிணி முதலிய இடர்களின்றி வாழ்வதற்காக அமைச்சர்களுடன் தனியிடத்தில் இருந்து ஆலோசனை செய்வர். புறநோக்கு உடையவராய் இல்லறத்தில் இருப்போர் வீடுபேறு அடைய மாட்டார். நீ நல்வழியில் நின்று இவ்வுண்மையை ஆராய்ந்து பார்ப்பாயாக".

73. பாசம்தான் பகையதாகப்
பார்வை பெற்றிடில் பாசத்தில்
பாசம்தான் வைத்துப் பின்னும்
பற்றவும் கூடுமோதான்
பாசம்தான் பகையது என்றே
பகரும் நூல்மட்டே கற்றோர்
பாசம்தான் விடவும் மாட்டார்
பரம் எலாம் என வாய்ப் போக்கும்.

(ஊறு=தொடு உணர்வு)

"ஒருவனுக்கு உலகவாழ்வில் பற்றுதல் இருப்பதே தனக்குப் பகை என்பது புரிந்துவிட்டால், உலக விஷயங்களில் ஆசை கொண்டு மறுபடியும் அவற்றை அடைய விரும்புவார்களா? (மாட்டார்கள்) ஞானத்தை விளக்கும் சாத்திரங்களை மட்டுமே படித்தவர்கள், "எல்லாம் பரம்பொருள்" என்று வாயால் பேசினாலும் உள்ளத்தில் ஆசையைத் துறக்காதவர்களே".

(பாசம் என்பது மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை மூன்றையும் குறிக்கும். இந்த ஆசைகளை உள்ளத்திலிருந்து முழுமையாக அகற்றியவர்களே ஞான தரிசனம் பெறுவார்கள் என்பது கருத்து)

74. அந்தம் ஆதியும் இலாவீடு
அடைந்து உடல் பிறப்பு அறுக்கச்
சுந்தர ஞானம் போதும்
துறவறம் ஏதுக்கு என்றே
மந்தஅதிகாரி யோரை
மதித்து நூல் உரைக்கும் செய்தி
அந்த மதான பேருக்கு
அத்தகை விளம்பாது என்றும்.

சில வேதாந்த நூல்கள், துறவறமே அவசியமில்லை, இல்வாழ்க்கையில் ஈடுபட்டுக்கொண்டே இந்தப் பிறவிப் பெருங் கடலிலிருந்து கரையேறி முடிவில்லாத வீடு பேற்றை அடையமுடியும் என்று மந்த புத்தியுள்ளவர்களுக்கே சொல்லுகின்றன. வீடு பேற்றை

உடனே அடைய வேண்டுமென்ற அதி தீவிரமான வேட்கை உடையவர்களுக்கு இது பொருந்தாது.

(மந்த அதிகாரி=நிதானமாக ஞான விசாரணைசெய்யும் தொடக்க நிலையிலுள்ள சாதகன். அதிதீவிர அதிகாரி=இப்போதே வீடு பேறு அடைய மிகத் தீவிரமாக முயற்சிக்கும் சாதகன்.)

75. தோன்றுகின்ற பொருள் இயல்பும்
தோற்றுவிக்கும் பொருள் இயல்பும்
தோன்ற உனக்கு யாம் உரைக்கச்
சோகம் அறவே கேட்டிடுவாய்
தோன்று பொருள்கள் அநித்தமும் ஆய்த்
தூய்மை இன்றித் துக்கமும் ஆய்த்
தோன்றும் தோற்று விக்கும் பொருள்
சுகமாய்ச் சுத்த நித்தமும் ஆம்.

"மாயையின் காரியமான பிரபஞ்ச தோற்றத்தையும் இதைத் தோன்றச் செய்கின்ற முதல் காரணமான பிரம்மத்தின் இயல்பையும் உனக்குப் புரியும்படி நான் கூறுகிறேன். உன்னுடைய மனக்கவலை நீங்கும் பொருட்டு நான் சொல்வதைக் கவனமாகக் கேட்பாயாக. மாயையால் தோன்றும் பொருள்கள் அனைத்தும் நிலையற்றவை. தூய்மையும் இல்லாமல் துக்கமும் தருபவையாகத் தோன்றும். இவற்றைத் தோன்றச் செய்கின்ற பிரம்மம் நித்தியமானது. தூய்மையானது. இன்பமே வடிவானது".

### தேக நிலையாமை கூறல்

76. பாலன் ஆன பருவம்போம்
பன்னுகு மாரப் பருவம்போம்
கோலம்ஆன தருணம்போம்
கோலை ஊன்றிக் குனிந்துஎழுந்து
காலன் மாய்க்க அனைவர்களும்
கல்என்று அழுது பேர்மாற்றி
ஏலப் பிணம்என்று ஒருபெயரிட்டு
இடுகாட்டு இடுதல் ஒருதலையே.

“நமக்கு முதலில் ஏற்படும் பாலன் ஆகிய பருவமும் போய் விடும். பாராட்டிப் பேசப்படும் குமாரப் பருவமும் போய்விடும். அழகான வாலிபப் பருவமும் போய்விடும். பின்னர்க் கிழப் பருபம் வரும். அவ்வாறு அப்பருவம் வந்தவுடன் தடி பிடித்துப் பூமியில் ஊன்றிக் குனிந்து எழுந்து நடக்கும்போது எமன் வருவான். அந்த எமன் மாய்க்க வரும்போது நமக்கு உரியவராய் உள்ள அனைவரும் கதறி அழுது, நமது பெயரை நீக்கிப் பிணம் என்று பெயரை இட்டு, சுடுகாட்டில் வைத்து எரித்தல் உறுதி”.

77. கருவின் நின்றும்அழிந்துபோம்
கண்ட குழந்தை யினும்குமரப்
பருவம் தனிலும் போம்தருணப்
பருவந் தனிலும் அழிந்துபோம்
உருவம் நடுங்கும் மூப்பதினும்
ஒடுங்கும் எந்தக் காலையினும்
ஒருவி அழிதல் இயல்பாகும்
உலகத்து உடலின் வாழ்க்கையுமே.

“இந்த உடலானது கருவில் இருக்கும் போதும் அழிந்தும் போகும். அதிலிருந்து வெளிவந்து உருவமாய் இருக்கும் பாலப் பருவத்தின் போதும் அழிந்து போகும். குமாரப் பருவத்திலும் அழிந்து போகும். வாலிபப் பருவத்திலும் அழிந்துபோகும். ஒவ்வோர் உறுப்பும் நடுங்குகின்ற கிழப் பருவத்திலும் அழிந்து போகும். உடலானது இந்த நால்வகைப் பருவத்தில் எப்பருவத்திலும் நீங்கி அழிதல் இயற்கையாகும்”.

78. பஞ்ச பூதம் அழிந்துபோம்
பானுத் திங்கள் உடுக்கள்போம்
வஞ்ச அசுரரர் மடிந்திடுவர்
மாகர் பதம்போம் வல்லரக்கர்
துஞ்சு வார்கள் போகிபதம்
துஞ்சும் பிரமன் பதம்தானும்
துஞ்சும் திருமால் பதம்துஞ்சும்
துஞ்சாது ஒன்றே பரமபதம்.

"வான், காற்று, தீ, நீர், மண் ஆகிய ஐம்பூதங்களும் அழிந்து போகும். சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் அழிந்து போகும். வஞ்சனை உடைய அசுரர்களும் இறந்து போவார்கள். இந்திரனது பதவியும் அழியும். நான்முகன் பதவியும் அழியும். திருமால் பதவியும் அழியும். உயர்ந்ததான முத்திப் பதவி ஒன்றே அழியாது".

### உடம்பின் இழிவு கூறல்

79. தோல்இ ரத்தம் எலும்புஇறைச்சி
சுக்லம் மேதை மச்சைஒன்றாய்த்
தூலி கரித்த உடம்பாகும்
தொட்ட எவையும் தன்வடிவாய்
கோலி அடக்கிக் கொளும் இதனைக்
கூறு கூறா நோக்காது
போலி உணர்வோன் மகிழ்வுஎய்தும்
புனிதம் என்றும் பரமபதம்.

"நம் உடம்பானது, தோல், இரத்தம், எலும்பு, இறைச்சி, இந்திரியம், நரம்பு, மூளை ஆகிய எழுவகைத் தாதுக்களும் ஒன்றாய்க் கூடிப் பருத்துத் தோன்றுகின்ற உடம்பாகும். தான் தொட்டு எடுத்து உட்கொண்ட எவ்வகைப் பொருள்களையும் தன் வடிவாகச் சேர்த்துத் தக்க உருவமாய் அடக்கிக்கொள்ளும். இவ்வுடம்பைத் தனித் தனியாய்ப் பிரித்து நோக்காது போலித்தனமான அறிவு உள்ளவன் உடம்பின் வாழ்க்கையை நிலையானது என எண்ணி மகிழ்வான். என்றும் பரமபதமே மேலானது".

### உடம்பால் வரும் துன்பம் உரைத்தல்

80. அரந்தை அதனை ஒழுங்காக
அறையக் கேள்நீ அவனிஎல்லாம்
பரந்த சிருட்டி திதிஒடுக்கம்
பண்பாய் நிகழும் சிருட்டிதனில்

பொருந்து பெரிய துன்புஐந்து
போய்மாண்டு உறில்அது எண்மடங்கே
இருந்த திதியும் இரண்டாகும்
இளமை என்றும் மூப்புஎன்றும்.

"உடம்பால் வரும் துன்பத்தை முறையாக நான் சொல்ல, நீ கேள். உலகம் முழுவதும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் முறையே நடைபெற்று வருவனவாம். பிறப்பில் நமக்கு வந்து சேரும் ஐவகைப் பெருந்துன்பங்கள் உள்ளன. அவை போய் மரணம் வந்து சேர்ந்தால் அது படைப்புக் காலத்தில் உண்டான துன்பங்களை விட எட்டுப் பங்கு அதிகமாகும். எஞ்சி இருந்த வாழ்நாளில் இளமை, மூப்பு என்று இருவகைத் துன்பங்களும் உண்டு".

(பிறக்கும் காலத்தில் துன்பங்கள் ஐந்துவகை: கருப்பாசயப்பை உறுத்தல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிரசூதவாயு முறித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தில் நெருக்குறல்.)

81. விருத்த பருவம் மிகத்துன்பம்
விளங்கும் இளமை இரண்டுஅவையின்
வருத்து பிணியின் மிகத்துன்பம்
வளமை இளமை மூன்றுஆகும்
கருத்து அது அறியாக் குழந்தைஎன்றும்
குமாரம் என்றும் காளைஎன்றும்
அருத்தம் அறியா ததில்துன்பம்
அடையும் பாலப் பருவத்தில்.

"கிழப் பருவத்தில் பெரிய துன்பம் உண்டாகும். தோன்றும் இளமைப் பருவத்தில் கிழப் பருவத்தில் உண்டான துன்பங்களைக் காட்டிலும் இரண்டு பங்கு அதிகமாம். அந்த இளமைப் பருவத்தில் நோயினால் அதிகத் துன்பமாம். இளமைப் பருவமானது களங்கம் இல்லாத பாலப் பருவம் என்றும், குமாரப் பருவம் என்றும், காளைப் பருவம் என்றும் மூன்று வகையதாகும். குழந்தைப் பருவத்தில் அறியாமையினால் துன்பம் சேரும்".

82. தந்தை தாயார் ஆசிரியர்
தாங்கள் முனிதல் தனக்குஅஞ்சிச்
சிந்தை கலங்கும் கவுமாரம்
சிறந்த காளைப் பருவத்தில்
முந்து பசிநோய் காமநோய்
முடுகித் தணிக்கப் பொருள்தேட
இந்தப் புவனத்து இரவுபகல்
இடைய றாத தொழில்துன்பம்.

"குமாரப் பருவத்தில் தந்தை தாய் ஆசிரியர் சினத்திற்கும் அடிக்கும் பயந்து மனங்கலங்கும். சிறப்பான காளைப்பருவத்தில் முதன்மையாய் வருகின்ற பசி நோயையும் காம நோயையும் விரைந்து தணித்திடப் பொருள் தேடி, முயன்று இவ்வுலகில் இரவும் பகலும் ஓயாமல் செய்யப்படும் தொழில்களாலே வருகின்ற துன்பம் நீங்காத துன்பமாம்".

## பொருளால் வரும் துன்பம் கூறுதல்

83. பொருள்உண் டாகில் காப்பதனால்
பொருந்தும் துன்பம் அரசுஆகின்
ஒருதன் மிகுந்த அரசரால்
உதவும் துன்பம் ஒருகுடைக்கீழ்
நிருபன் ஆகில் நோய்மரணம்
நேரும் என்னும் பயத்தானும்
வருவது எனையோ மறுமையினில்
என்றும் வாடித் துன்புறுமே.

"நமக்குப் புண்ணிய வசத்தால் பொருள் உண்டாகும். ஆனால் கள்வர்களும், உறவினர்களும் அவற்றைக் கவர்ந்து கொள்ளாதவாறு காப்பாற்றும் படியான துன்பம் வந்து சேரும். அரசனாக இருந்தால் தன்னைக் காட்டிலும் மேம்பட்ட அரசனால் துன்பம் வந்து சேரும். உலகம் முழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளுகின்ற பேரரசனாக இருந்தாலும் நோய், சாவு ஆகியன வந்து சேருமே என்ற பயத்தாலும், மறுபிறவியில் என்ன உண்டாகுமோ என்ற பயத்தினாலும் வாடித் துன்பம் அடைவான்".

*(தொடரும்....)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/06/09 : மனதின் கதை

(முற்குறிப்பு : நான் முகன் இக்கதையைத் தமக்குக் கூறியதாகவும், அதையே தாம் (வசிட்டர்) இராகவருக்குக் கூறுவதாயும் இக்கதை அமைந்துள்ளது.

நம்ப இயலாத, கோர்வையற்ற, குழப்பமும் அலைச்சலும் மிகுந்த, பலவாறான செயல்களைத் தொகுத்துக் கூறி, அதன் பொருளாக, மனம் இத்தகையது என இங்கு விளக்கப்படுகிறது.)

**கதைப் பகுதி :** மிகப் பெரிய ஓர் காடு உண்டு. அங்கு துயரம், அச்சம், பொய் ஆகியன மிகுதியாக உண்டு. அக்காட்டில், பரந்த உடல் கொண்ட மிகப் பெரிய மனிதன் ஒருவன் உள்ளான். அவனுக்குப் பல கைகள் உண்டு. அவன், அவனது பற்பல கைகளில் பல தடிகளை ஏந்தியுள்ளான். அவன், தன்னிடமுள்ள தடிகளால், தனது உடலுறுப்புக்களைத் தானே சிதற அடித்துக் கொண்டு வலியால் துடித்தும், கதறி அழுதும், நடுங்கியும், ஓடி இடிபட்டும், ஒரு பாழுங்கிணற்றில் விழுந்தும், துன்புற்றான். பின்னர் அக்கிணற்றினின்றும் மீண்டு எழுந்து ஓடினான்; கருவேல முள்ளில் பாய்ந்தான்; தீயில் விழுந்து வாடினான்; பின்னர் ஒரு வாழைத் தோப்பினை அடைந்து மகிழ்வுற்றான்.

அவன் வாழைத் தோட்டத்தை விட்டுச் சென்று மறுபடியும் முள் காட்டிலும் பாழுங்கிணற்றிலும் விழுந்தான். மற்றொருவன், அவனிடம், "நீ யார், ஏன் இவ்வாறு செய்து துயரடைகிறாய்" எனக் கேட்க, முதலாமவன், "நான் என ஒருவன் இல்லை. இங்கு செய்கை ஏதுமில்லை. நீர் இவ்வாறு தடுத்தலே துயரமாயுள்ளது. நீர்தான் என் எதிரி" எனக் கூறி, தனது உடலைத் தானே பார்த்துக் கொண்டு கதறி அழுதான்; பின்னர் சிரித்தான்; அதன் பின் தன் உடலுறுப்புக்களை மேலும் வெட்டி எறிந்தான்; ஊழ் வயத்தால் அவ்விடம் விட்டகன்றான்.

மற்றொருவனும் அக் காட்டினுள் வந்து, முன்னவன் போலவே துயரடைந்தான். பிறிதொருவனும் வந்து அப்பாழுங் கிணற்றில் விழுந்தான்; ஆனால் இன்னும் அதிலிருந்து வெளிவரவில்லை. வேறொருவன் வரில் அறிவிப்போம்.

எம்மால் முடிந்த மட்டும், அனைத்து வழியிலும் உபதேசித்தோம். அதனைக் கேளாது ஒருவன் எம்மைத் திட்டிவிட்டுப் போனான். அவனைப் போன்றோரும், அந்தக் காடும், இப்போதும் உளது.

"அறவே கொடிதாய் வெந்த அடவி எனினும் அறியார்
நறவே கமழ்ந்து குளிர்ந்தநந்தவனம் போல்மகிழ்வர்
மறவேல் அரசே என்ற வசிட்ட முனியைநோக்கி
......"

இராகவரும், "துறவேபுரிவாய், இவற்றை எனக்குத் தோன்றச் (விளங்கச்) சொல்வீராக" என வேண்டிக் கொண்டார்.

"கேட்டகுரிசில் அறியக்கிளர் மாமுனிவன் உரைப்பான்
நாட்ட அடியும் முடியும்நடுவும் இன்றிப் பொய்யாம்
கூட்டமாகி ஆழ்ந்து கொடிதாய் விகற்பநெடிதாம்
ஈட்ட உலகத்து இயல்பே யாம்முன்சொன் னவனமே"

(நாட்ட = நிலை நாட்ட, விகற்ப = வேறுபாடு, ஈட்டம் = திரள்) எனத் தொடங்கிய வசிட்டர், கீழ்க்கண்ட விளக்கமும் சொன்னார்.

காடு என்றது உலகியல். மனிதன் ஒருவன் என்றது மனமாகும். தடுத்த நாம் என்றது விவேகம். ஓடுதல் என்றது ஆசை வயப்படுதல். கிணறு என்றது நரகம். வாழைத்தோட்டம் என்றது சுவர்க்கம். கருவேல் முள் என்றது மண்ணுலகம். கதறி அழுதல் என்றது அனுபவிப்பை விட்டு நீங்குதல், சிரித்தான் என்றது ஞானம் பெறுதல். உடலுறுப்புக்களை வெட்டியது என்றது மனகற்பனை. நிறுத்திக் கேட்டோம் என்றது மனம் அடங்கியமை ஆகும்.

"மாசிலாத மனத்தால் மதித்துமனத்தை மாய்ப்பாய்
தேசமுடையாய் என்றுதெளிந்த வசிட்டன் உரைத்தான்"
என இக்கதை முடிவுறுகிறது.

**தத்துவப் பகுதி :** மனம் என்பதை, 'அது அறிவில்லாதது (சடம்)' எனவும், அதையே 'அறிவுடைய சேதன'மாகவும், முரண்பாடாகக் கூறப்படுகிறதே, இவற்றில் எது சரியானது, மனமானது உண்மையா பொய்யா என இராகவர் கேட்டார். இதற்கு வசிட்டரின் விளக்கமாக அமைந்தது இப்பகுதி.

ஆன்மாவானது, நம் எண்ணக் கருவுடன் (சங்கற்பம்) கூடியதன் வடிவமே மனம் என்பதாகும். ஆதலால், மனமானது சத்து (சேதனம்), அசத்து (சடம்) எனும் இரண்டிற்கும் இடைப்பட்டுச் செயல் புரியும். இதனை,

**"அகில சத்ததி உடைத்தாய அநந்தமான பிரமம்**
**புகல்சங்கற் பத்தோடே பொருந்தும் வடிவேமனமாம்**
**இகலும்சத் தோடுஅசத்தாய் இரண்டினுள்ளுந் தோன்றிப்**
**பகருந்தொழில் களோடே பயில்பாவனை யும்அஃதே"**

எனக் கூறியுள்ளார். இதனால் மனதிற்கு ஆன்மாவாகவோ, ஆன்மாவாக அல்லாதோ (அநான்மா) செயல்புரிய இயலும். இதனை பரமார்த்திகமும் வியவகாரிகமும் சேர்ந்தது எனலாம். அல்லது மனம் உண்மையானதும் பொய்யானதும் கூட எனவும் கூறலாம். எடுத்துக்காட்டாக தீயவாசனை (மலின வாசனை) கொண்டவரது மனம் பற்றுக் காரணத்தால் வெளிமுகப்பட்டு, வியவகாரிகம் செய்யும். வியவகாரிகம் என்பது அவித்தை. அவித்தையானது பொய்யாதலின், மனமும் பொய் எனப்படும். மாறாக, அதே மனத்தை மடை மாற்றம் செய்து, மாசற்றதாக ஆக்கலாம். அப்போது மனம் உள் முகப்படும். இதுவே 'மனதால் மனதை மாய்த்தல்' எனப்படுகிறது.

உள்முகப்பட்ட மனதிற்கு மோகம் (பேராசை) ஏதுமில்லை, ஆதலால் அது முக்திபெற உதவும். இதனால் மனதைப் பரமார்த்திகமானது என்பதும் தகும். இதனை, வசிட்டர்,

**"எங்கேயெனினும் தோன்றும்இந்த மனதை முத்திச்**
**சங்கேதத் தால்ஊகந் தன்னில் கூட்டின்நன்றாம்"**

எனக் கூறுகிறார். இந்நிலையில் நம் மனமும் (ஆதலால் நாமும்) 'சித்' தாகவே ஆகலாம். இது, வசிட்டரால்,

"முடிவின் ஞானத்தாலே மோகம்விட் டமனந்தான்
வடிவைமாய்க்கும் பொழுது மகிழும்அதுவே மகிழ்வாம்"
எனக் கூறப்பட்டுள்ளது.

**பிற்குறிப்பு:** மனம், மிகுந்த ஆற்றலுடையது. எனினும் அதனை எவ்வாறு செலுத்துவது எனும் பேராற்றல் நம்மிடமே உள்ளது என இக்கதை சுட்டிக் காட்டுகிறது.

எதிர்மறைகளில், 'ஒன்று உள்ளபோது மற்றொன்றிற்கு இருப்பில்லை' எனப்படுவனவற்றை (உண்டு - இல்லை, ஒளி - இருள், பெரிதினும் பெரிது - அணு போன்றன) ஒருசேரக் காணுதல் இயலாது என நாம் அறிவோம். ஆனால் இங்கு எதிர்மறைகளான உலகியலும் (வியவகாரிகம்) மெய்யியலும் (பரமார்த்திகம்) மனம் மூலமாகக் காணப்படுதல் பற்றி விவரிக்கப்படுகிறது. வேற்றுமைகளுக்கு ஒற்றுமை காணும் இத்தத்துவப் பகுதி, அத்துவிதத்தின் தனிச்சிறப்புகளில் ஒன்றாகும்.

*(தொடரும்.....)*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய சுபானுவத் திருவாக்கு

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

கோவிலூர் ஆண்டவர் எனும் புகழுடைய, சீர் வளர்சீர் முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகள், இம் மடாலயத்தின் குரு முதல்வராவார்கள். சுவாமிகளின் வரலாறு பற்றி முன்னரே எழுதப்பட்டுள்ளது. (1-2)

வடமொழி அறியாதோரும் கூட, தமிழ் மொழி வாயிலாகவே தத்துவம் கற்கலாம் எனும் கருணை கொண்ட சுவாமிகள் கடைப்பிடித்த பாடமுறைக்கு 'கோவிலூர் மரபு' எனப் பெயர். வேதாந்தம் பயிற்றுவிக்கும் 16 தமிழ் நூல்கள் (3-18) இதில் அடங்கும்.

இந்நூல்களில் கூறப்படும் வேதாந்தக் கருத்துக்களைத் தாமே தமிழ்ச் செய்யுட்களாக்கியும், உரைநடைக் கண்ணிகளாக்கியும்

சுவாமிகள் பயன்படுத்தினார்கள். இவை, பின்னர் திரட்டப்பட்டு, 'சுபானுவத் திருவாக்கு' எனும் நூலாக வெளியிடப்பட்டுள்ளன. (19)

சுபானுவத் திருவாக்கில், 1) இறை வணக்கம், 2) குரு வணக்கம், 3) முத்தி நிச்சயம், 4) மனதிற்கு அறிவுறுத்தல், 5) புத்திக்கு அறிவுறுத்தல், 6) நெஞ்சோடு இரங்கல், 7) தெய்வமே (எனும் கண்ணி), 8) கிளிப் பத்து, 9) சுபானுவத்திரு வாக்கியங்கள் எனும் பகுதிகளில் ஏறத்தாழ 675 செய்யுட்களும், 80 திருவாக்கியங்களும் உண்டு.

இந்நூல் வாயிலாக நாம் கோவிலூர் ஆண்டவரின் தமிழ்ப் புலமையையும், ஆழமான தத்துவங்களையும் கூட எளிமையாக்கித் தந்துள்ளமையையும், கண்டு வியப்புறாதிருக்க இயலாது.

வேதாந்தப் பயிற்சிக்கான படிக்கட்டுகளெனக் கூறப்படும்,

I உலகியலில் தான் அல்லலுறுவதாக எண்ணுதல் (விரக்தி),
II உலகியல் தொல்லைகளைப் புரிந்து கொள்ளல் (விவேகம்),
III தொல்லைகளை ஒதுக்குதல் (வைராக்கியம்),
IV ஆன்மீக நாட்டம் (அதிகாரத்வம்),
V குருவை அடைதல் (சரணாகதி),
VI பாடம் கேட்டல் (சிரவணம்),
VII தானே விசாரணை செய்தல் (மனனம்),
VIII தெளிவு பெறல் (நிதித்யாசனம் / சித்த சுத்தி),
IX தத்துவ அறிவு பெறல் (பரோட்ச ஞானம்),
X தற்பர உணர்வாகவே ஆகுதல் (அபரோட்ச ஞானம்),

மேற்கூறிய பகுதிகளும், இவை ஒவ்வொன்றிற்குமான உட்பகுதிகளும் சேர்த்துக் கூறப்பட்டுள்ளமையால், இந்நூல் கோவிலூர் மரபுப் பாடநூல்கள் அனைத்திற்குமான தெளிவாக (சாரம்) அமைந்துள்ளது எனலாம்.

இப்பகுதிகளுக்கும், மற்றும் உட்பகுதிகளுக்குமான அருளுரைகள், கோவிலூர் ஆண்டவரால் எவ்வாறு கூறப்படுகின்றன என இனிவரும் இதழ்களில் காண்போமாக.

**மேற்கோள் நூல்கள்**

1. மகாத்ம சரிதாம்ருதம் (காசிகாநந்த ஞானச்சார்ய சுவாமிகள்).
2. கோவிலூர் திருக்குட நீராட்டு 1978 - விழா மலர் (பதிப்பாசிரியர் சோமலெ).
3. நாநாசீவ வாதக்கட்டளை (சேஷாத்ரி சிவனார் இயற்றியது).
4. கீதா சாரத்தாலாட்டு (திருவேங்கட நாதர் இயற்றியது).
5. சசிவன்ன போதம் (எறும்பூர் தத்துவராய சுவாமிகள்).
6. மகாராஜா துறவு (விருத்தாசலம் குமார தேவர்).
7. வைராக்ய சதகம் (பேரூர் சாந்தலிங்க சுவாமிகள்).
8. வைராக்ய தீபம் (பேரூர் சாந்தலிங்க சுவாமிகள்).
9. இலட்சணா விருத்தி (கோவிலூர் கருணாநிதி சுவாமிகள்).
10. அஞ்ஞவதைப்பரணி (எறும்பூர் தத்துவராய சுவாமிகள்).
11. வேதாந்த சூடாமணி மொழி பெயர்ப்பு (துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் தமிழ்ச் செய்யுள்கள்)
12. கைவல்ய நவநீதம் (நன்னிலம் தாண்டவராய சுவாமிகள்).
13. விவேக சூடாமணி மொழி பெயர்ப்பு (திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகளின் தமிழ்ச் செய்யுள்கள்).
14. ஸ்ரீ பஞ்சதசி மொழி பெயர்ப்பு (கோவிலூர் நித்யானந்த சுவாமிகள், கோவிலூர் வீர. சுப்பையா சுவாமிகளின் தமிழ்ச் செய்யுள்கள்).
15. ஈசுர கீதை மொழி பெயர்ப்பு (எறும்பூர் தத்துவராய சுவாமிகளின் தமிழ்ச் செய்யுள்கள்).
16. பகவத் கீதை மொழி பெயர்ப்பு (பட்டனாரின் தமிழ்ச் செய்யுள்கள்).
17. பிரம்ம கீதை மொழி பெயர்ப்பு (எறும்பூர் தத்துவராய சுவாமிகளின் தமிழ்ச் செய்யுள்கள்).
18. ஸ்ரீ ஞான வாசிட்டம் மொழி பெயர்ப்பு (வீரை ஆளவந்தாரின் தமிழ்ச் செய்யுள்கள்).
19. சுபானுபவத் திருவாக்கு (ஸ்ரீ லஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர்). (ஞான தேசிக சுவாமிகள். டாக்டர் சுப. அண்ணாமலை உரை)

## சித்த ஞானம்

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

"எனக்குமுன்னே சித்தர்பலர் இருந்தார் அப்பா
யானும்வந்தேன் ஒருசித்தன் இந்த நாட்டில்
மனத்தினிலே நின்(று)இதனை எழுது கின்றாள்
மனோன்மணிஎன் பராசக்தி வையத் தேவி
தினத்தினிலே புதிதாகப் பூத்து நிற்கும்
செய்யமணித் தாமரைநேர் முகத்தாள் காதல்
வனத்தினிலே தன்னைஒரு மலரைப் போலும்
வண்டினைப்போல் என்உருவை மாற்றி விட்டாள்"

இப்படித் தன்னையும் ஒரு சித்தனாகக் கருதிய பாரதி அனைத்து உயிர்களையும் நேசித்தவன்; உயிர்களிடத்தில் அன்பு வேணும் என்று பாடியவன் அல்லவா பாரதி ! அவனே ஓர் இடத்தில்

"உயிர்கள்எல்லாம் தெய்வம் அன்றிப் பிறி(து)ஒன்(று) இல்லை
ஊர்வனவும் பறப்பனவும் நேரேதெய்வம்
பயினும்உயிர் வகைமட்டும் அன்றி இங்குப்
பார்க்கின்ற பொருள்எல்லாம் தெய்வம் காண்பார்
வெயில் இலங்கும் இரவிமதி விண்மீன் மேகம்
மேலும் இங்குப் பலபலவாம் தோற்றம் கொண்டே
இயலுகின்ற ஜடப்பொருள்கள் அனைத்தும் தெய்வம்
எழுதுகோல் தெய்வம்என் எழுத்தும் தெய்வம்"

என்று பலவற்றோடு எழுத்தையும், எழுது கோலையும் தெய்வம் என்றவன். வாழ்க்கையில் உறுதிப் பாடு வேண்டும் என்ற பாரதி எதற்கும் வருந்தாத மனம் கொண்டவராய் இருத்தல் வேண்டும் என்று பாடுகிறான்.

"வடகோ(டு)இங்(கு)உயர் ந்தென்னெ சாய்ந்தால் என்னே
வான்பிறைக்குத் தென்கோடு பார்மீ(து)இங்கே
விடம் உண்டு சாவாமல் இருக்கக் கற்றால்
வே(று)எதுதான் யா(து)ஆயின் எமக்(கு)இங்(கு) என்னே

திடங்கொண்டு வாழ்ந்திடுவோம் தேம்ப வேண்டா
தேம்புவதில் பயன்இல்லை தேம்பித் தேம்பி
இடர்உற்று மடிந்தவர்கள் கோடி கோடி
எதற்கும்இனி அஞ்சாதீர் புவியில் உள்ளீர்”

என்று பாடிய பாரதியின் ஞான வரிகள் சித்தர்களிடம் இருந்து பெற்ற அனுபவமே. சாகாக் கலையைப் பற்றிச் சித்தர்கள் பாடியுள்ளனர். மரணம் இலாப் பெருவாழ்வு வாழலாம் கண்டீர் என்று வள்ளற்பெருமானும் பாடிச் சென்றுள்ளார். அந்நாளில் இதன் பொருளைத் தவறாக உணர்ந்து கொண்டோர் இறந்தவர் உடல்களுடன் வடலூருக்குப் படையெடுத்ததாகக் கேள்வி. இங்குப் பருவுடலை நீக்கி நுண் ணுடலுடன் வாழ்தலையே இத்தொடர் குறிக்கும்.

பாரதி அனைத்தையும் நேசித்த வழி சித்தர்கள் காட்டிய நெறியே மானுட சேவைசெய்யவே மகேசன் நம்மைப் படைத்தான் என்பதில் அசையா நம்பிக்கை கொண்ட சித்தர்கள் வாழ்க்கை போக வாழ்க்கை அன்று. அது யோக வாழ்க்கை. இயற்கையை நேசித்த சித்தர்கள் மலை காடுகளில் வாழ்ந்தனர். அங்குள்ள செடி கொடிகள் அனைத்தும் உயிர் காக்கும் மூலிகைகள் என்பதை இறைவன் இவர்களுக்கு உணர்த்தினான். இவற்றை அறிந்த சித்தர்கள் மனிதர்களுக்குப் பிணியகற்றும் சேவையை இலவசமாகச் செய்தனர். வாழ்க்கைக் கலையைக் கற்றுக் கொடுத்தனர் : நோயின்றி உடலை நலமுடன் பேணுதற்கு உரிய வழிமுறைகளை யோகா வழியாய்க் கற்றுத் தந்தனர்

சிவஞானம் கைவரப் பெற்ற சித்தர்கள் எழுதிய மருத்துவ நூல்களும் தத்துவ நூல்களும் எண்ணற்றவை. இத்தகைய சித்தர்களைப் பதினெண் சித்தர்கள் என்று எண்ணிக்கைப் படுத்துகின்றனர்.

| | |
|---|---|
| 1. சித்தர் சிவவாக்கியர் | 2. அவ்வையார் |
| 3. பட்டினத்தார் | 4. பத்திரகிரியார் |
| 5. அகப்பேய்ச் சித்தர் | 6. அழுகணிச் சித்தர் |

| | | | |
|---|---|---|---|
| 7. | இடைக்காட்டுச் சித்தர் | 8. | கடுவெளிச் சித்தர் |
| 9. | பாம்பாட்டிச் சித்தர் | 10. | குதம்பைச் சித்தர் |
| 11. | கொங்கணச் சித்தர் | 12. | பீர் முகம்மது |
| 13. | வாலைச் சித்தர் | 14. | உலோகாயதச் சித்தர் |
| 15. | ஏனாதிச் சித்தர் | 16. | காளைச் சித்தர் |
| 17. | நந்தீசுவரர் | 18. | இராம தேவர் |

இப்படி ஒரு நூல் கூறுகின்றது. அது மேலும் கருவூரார், சேஷயோகியார், திருவள்ளுவர், சட்டைமுனி, கணபதிச் சித்தர், அகத்தியர், உரோமரிஷி, சுப்பிரமணிய சித்தர், வான்மீகி, காகபுசுண்டர், சூரியானந்தர், கரைச் சித்தர், தடங்கண் சித்தர் எனப்பல சித்தர்கள் பற்றிக் கூறுகிறது. இது தவிர சித்தர்கள் இராஜ்ஜியம் என்ற வலைத்தளம் இரசமணிச் சித்தர், கல்லுளிச் சித்தர், காலாங்கி நாதர், கோரக்கர், சுந்தரானந்தர், திருமூலர், தேரையர், பிண்ணாக்கீசர், பிரம்ம முனி, புலிப்பாணி, மச்சமுனி, கமலமுனி, யூகி முனி, யாகோபு, வள்ளலார், கோடக நல்லூர்ச் சுந்தர சுவாமிகள் என்பவர்களைப் பற்றிப் பதிவு செய்துள்ளது. இவை தவிரப் பின்னாளில் தோன்றிய கட்டிகுளம் மாயாண்டி சுவாமிகள். சேஷாத்ரி சுவாமிகள், திருவண்ணாமலை ஈசானிய தேசிகர். கோவிலூர் முத்திராமலிங்க ஆண்டவர், பாம்பன் சுவாமிகள். இரமண மகரிஷி, ஷீர்டி சாய்பாபா, புட்டபர்த்தி சாயிபாபா போன்றவர்களையும் சொல்லுகின்றனர்.

இவர்களில் சிலர் மருத்துவத் துறையிலும், சிலர் பூஜா விதித்துறையிலும், சிலர் இரசவாதத் துறையிலும், சிலர் வசியத் துறைகளிலும், சிலர் பாதரசத்தைக் கட்டும் துறையிலும் வித்தகர்களாக விளங்கினர். சித்தர்கள் மருத்துவம் விரிந்து பரந்த கடல். இவர்களில் பலர் நாடி சோதிடத்தில் வல்லவர்களாய் விளங்கி எதிர் காலத்தில்தோன்றப் போவோரின் பெயர் அங்க மச்ச அடையாளங்கள் வாழ்வில் நடந்தவை, இனி நடக்க இருப்பவை ஆகியன பற்றிக் கூறியுள்ளனர். இதனை நம்புவாரும் உளர், நம்பாதாரும் உளர்.

*(தொடரும்....)*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

வல்லியம் உரைத்த வார்த்தைகேட்(டு) அரசன்
மறையவன் துயர்எனும் வடிவேல்
கொல்லிய எழுந்த கூற்றினும் கடுகிக்
குமைத்தலும் உள்ளமா பூாந்து
புல்லிய தடித்(து)இல் போவதாய் அநந்தம்
புகர்படும் இடர்க்(கு)எலாம் இடமாய்ச்
சொல்லிய அநித்த மாய்மரு(வு) அரசர்
தொகுபெரும் செல்வம்நேர் பொருளோ 28

அனையசெல் வத்தைப் பொருள்என மதிக்கும்
அறி(வு)இலார் தமைச்சுட வேண்டும்
புனையவல் லவராய் எந்தநற் கருமம்
புரிந்தவர் பிரமலோ கத்தை
நினையநன்கு அடைவார் அந்தநற் கருமம்
நிகழ்த்தலே அறிவினர் செய்கை
இனைய(து)ஒன்(று) அன்றி உலகம்ஓம் பாத்தீங்(கு)
எற்றைக்கும் இயற்றஒண் ணாரால் 29

என்றுபற் பலவும் உரைத்(து)இனிப் புகறல்
இல்லைஎன்(று) ஒருங்கிய மனத்தில்
ஒன்றுதன் தலையைக் கொண்டுபோய்ப் புலிவாய்
உள்உறக் கொடுத்தனன் அரசன்
என்(று)உல(கு) உலவும் வெம்புலிப் போத்து
வேதியன் தன்னொடு மறைந்த(து)
அன்றுகண்(டு) உவப்(பு)உற்(று) அமரர்கற் பகத்தின்
அலர்மழை பொழிந்தனர் மாதோ 30

புலியொடு மறையோன் மறைந்ததும் அமரர்
பூமழை பொழிந்தது நோக்கி
ஒலிவரி கழற்கால் பாண்டியன் இறும்பூ(து)
உற்(று)உளம் அயிர்த்தனன் நின்றான்
மலிதரு தவத்து முனிவதோர் என்னும்
மாதவன் மலர்அடி போற்றி
நலி(வு)அகல் மற்றை யதும்புகல் என்ன
நற்றமிழ் முனிவரன் நவில்வான் 31

*மாயப்புலி நீங்கிய படலம் நிறைவுற்றது.*

## கொற்றவாளீசப் படலம்

பற்றார் உடம்பு தபப்போழ்து பசிய விடக்கு முழு(து)உண்டு
துற்றார் கொழுவும் அயின்(று)இழிநெய்த் தோரும் குடித்துத்
தேக்(கு)எறிந்து
நல்தார் பொருவக் குடர்பூணும் நாம வடிவேல் செழியர்பிரான்
உற்றார் ஒருவர் இன்றிஅவன் ஒருபா தலத்தின் நிழல்நின்றான் 1

ஓடும் உழைப்பின் இந்தவனத்(து) உற்றேன் அதுவஞ் சித்(து)அகன்ற(து)
ஆடு பொருவப் புலிவாயில் அகப்பட் டானோ(டு) அப்புலியும்
நாடு முனம்போய் மறைந்த(து)இது நனவோ கனவோ வே(று)ஒன்றோ
கூடு செறிவாள் போனதுவும் குறியேன் என்று குறித்(து)உணர்வான்
2

பெருமான் கரத்தில் ஒருமான்கொள் பெம்மான் கொடுப்பக்
கொண்ட(து)அவன்
ஒருமான் தொடரக் கழிதரும் என்(று)உரைத்த(து) இலையே அஞ்சாது
பொருமான் அவருள் விண்ணவருள் போந்து கவர்வார் இல்லைமதி
மருமான் எனக்(கு)இத் துயர்உற்ற(து) என்என்(று) உணர்ந்து
மயங்குங்கால் 3

வேட்டம் புரிந்த கானகத்து நின்ற வீரா எல்லாரும்
வாட்டம் தவிர்க்கும் மன்னவனைக் காணார் ஆகி மதிமயங்கி
பாட்(டு)அம் சுரும்பர் உளரும்வளம் பலவும் தேடிச் சமிவனத்து
நாட்டம் செலுத்தி வந்(து)அடைந்தார் கண்டார் தமியா நரபதியை 4

கண்டு மகிழ்ந்து தொழு(து)எழுந்து
காணா(து) இருந்த கவலைஎலாம்
விண்டு செழியர் போர்ஏறே
வேட்டம் புரிந்த கான்நின்று
தொண்டு புரியும் எமைஒருவித்
தூரம் ஆம்இச் சமிவனத்தில்
அண்டும் முறைஎன் எனவினவி
அறிந்தார் அரசன் சொல அனைத்தும் 5

இனியாம் புரிவ(து) எவன்என்ன
இந்த வனநாற் புறத்தினும்போய்
தனியா இருக்கும் அதிசயம்நீர்
தெரிந்து வந்து சாற்றும்எனப்
பனிஆர் கதிரோன் குலவேந்தே
புத்தி என்று பணிந்(து)எழுந்து
நனிஆ தரவில் கைகூப்பி
நடந்தார் வீரர் அனைவருமே 6

ஒருவர் ஒருவர் தமின்முந்தி
ஓடித் திசைநாற் புறத்தினும்இல்
வெருவர் துருவிக் கண்டனர்ஓர்
சமியின் நிழல்வே தாகமங்கூ(று)
அருவர் உருவர் அருஉருவர்
அகண்ட சச்சி தாநந்தர்
இருவர் உணரார் அருள்குறியும்
இலகி மருங்கின் அவர்வாளும் 7

கண்ட பொழுதே விரைந்தோடிக்
கையும் கூப்பார் முன்எய்திக்
கொண்ட உவகை தலைசிறப்பக்
கொற்ற வேந்தே இதுகேட்டி
விண்ட மலர்சார் மதுப்பொய்கை
மேல்பாய் வன்னித் தருவடியில்
அண்டர் இறைஞ்சு சிவக்குறிஒன்(று)
அருகு வாளோ(டு) அமர்ந்ததால் 8

இ(து)அ லால்வே(று) அதிசயம்இன்(று)
என்றார் அதுகேட்(டு) உளத்(து)உவகை
அதுவி ராவக் கண்களில்நீர்
அரும்பத் தலைமேல் கரங்குவித்து
மதுவி ராவும் கடுக்கைமுடி
வள்ளற் பெருமான் விளையாட்டோ
புதுவி ராய இவைஎல்லாம்
என்று புளகம் போர்த்(து)எழுந்தான் 9

கண்டு வந்த தமர்நடவை
காட்டிச் செல்லப் பின்சென்று
பண்டு பிரமன் மால்தேடிக்
காண ஒண்ணாப் பரம்பொருளைத்
தொண்டு புரிவார்க்(கு) எளி(து)ஆய
சோதி தனைக்கண்(டு) உளநெகிழ்ச்சி
கொண்டு படிமேல் பணிந்(து)பணிந்(து)
எழுந்தான் பாண்டிக் குலவேந்தன் 10

ஆடும் குதிக்கும் அரகரஎன்(று)
அங்கை கொட்டும் பெருமகிழ்ச்சி
நீடும் அணித்தில் போய்நோக்கும்
நிரம்பத் தழுவும் நெஞ்(சு)உருகக்
கூடும் புளகம் போர்க்கும்அழும்
குலவச் சூழ்ந்து சூழ்ந்துபல
பாடும் பழிச்சும் பரவசமாய்ப்
பத்தி உரு(வு)ஆ கியகோமான் 11

விலங்கு துருவிக் கொன்(று)உழலும்
வேட்டைக் காட்டில் நின்(று)அடியேன்
மலங்கு தவிர்த்(து)ஆ ளுதற்பொருட்(டு)ஓர்
மானை வெளியில் செலுத்திவளம்
இலங்கும் இனைய கான்புகுத்தி
யேத்த வெளிப்பட்(டு) இருந்தனையால்
கலங்கு தல்இல்அம் மான்அடிகள்
கைம்மான் கொல்லோ அறியேனே 12

தெளித்த உணர்வில் பெரியோர்தம்
சிந்தைத் தளியாய் எவ்விடத்தும்
ஒளித்த கள்வன் யானேஎன்(று)
உணர்த்தற் பொருட்டோ ஒருதமியேன்
களித்த சுரும்பர் உளர்காட்டில்
துயிலும் பொழுது கலந்தாரை
அளித்த வடிவாள் கவர்ந்தனைவாள்
அரக்கற்(கு) அளித்த அடிகளோ 13

மாறா(து) உலகில் பயில்மாயை
வல்லான் யான்என்(று) உணர்த்தற்கோ
தேறா ஒருநான் மனங்கலங்கத்
தீவாய்ப் புலியைத் தோற்றுவித்தாய்
ஆறா தரித்த சடைமுடியாய்
அரையில் உடுத்த புவியோமன்
ஏறா நடனம் காண்புலியோ
இன்ன(து) அ(து)என்(று) இயம்புகவே 14

உள்ள படியே வெம்புலிவாய்
அகப்பட்(டு) உழலும் ஒருவனிலும்
கள்ளம் அகன்ற கைதவன்ஆ
கியயான் கலங்க மிகக்கலங்கி
விள்ள முடியாப் பெருந்துயரம்
மேவப் புரிந்த கைதவனார்
தெள்ள முடியா(து) இனையன்என
உரைப்பாய் தேவ தேவனே 15

சருவ பரிபூ ரணபோற்றி
சருவ சொரூப னேபோற்றி
சருவ சாட்சி யேபோற்றி
சருவ சத்தி யாய்போற்றி
சருவ விசுவ னேபோற்றி
சருவ சனபா லகபோற்றி
சருவ பலனும் கொடுக்கின்ற
சருவே சுரநின் தாள்போற்றி 16




நந்து கிருபா கரபோற்றி
ஞானா நந்த பரபோற்றி
இந்து புனையும் அரபோற்றி
எறிநீர்த் துயிலும் சரபோற்றி
வந்து புசிபூண் உரபோற்றி
வானோர் விரும்பும் அரபோற்றி
முந்து பொத்ந்த புரபோற்றி
மொழிபேர் ஓர்ஆ யிரபோற்றி 17

*(தொடரும்...)*

## ஆண்டவரின் சீடர்களுடைய அற்புதக் குணங்கள்

### (சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

மதுரைக் குட்டைய சுவாமிகளைப் பற்றி, அவர்கள் ஆண்டவரின் அருள் ஆணையின் வண்ணம் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் கம்பத்தடி மண்டபம், அதனை அடுத்து வடக்குக் கோபுரம் ஆகிய திருப்பணிகளை, வயிநாகரம் குடும்பத்தாருக்கு உதவியாக மேற்பார்வையிட்டுச் செம்மையாகக் காலம் காலமாக அவர்கள் பேர் சொல்லும் வகையில் அமைத்துத் தந்தார்கள் என்பதும் குட்டைய சாமி மடத்தை நிறுவினார்கள் என்பதும் தவிர எந்தச் செய்தியும் தெரியவில்லை.

அவர்கள் வாழ்க்கைச் செய்திகள், பிறந்த ஆண்டு, குட்டையசாமி மடம் நிறுவப்பட்ட ஆண்டு போன்ற முக்கியமான செய்திகள் கூட நமக்குக் கிடைக்கவில்லை. அவர்கள் விதேகக் கைவல்யம் அடைந்த ஆண்டு 1872 என்பது மட்டுமே தெரிகின்றது. அவருடைய சீடர்களில் சின்னையாசாமி, கண்ணப்பசாமி இருவரும் பின்னர் மடாதிபதி ஆனார்கள்.

நம்முடைய மடாலயங்களின் நூலகங்களில் தேடிக் கொண்டிருக் கின்றோம். ஏதேனும் செய்திகள் கிடைத்தால் பேறு பெற்றவர்கள் ஆவோம். அடுத்ததாக ஆண்டவரின் சுவிகாரத் தந்தையான காரைக்குடி மெ.மெ. குடும்பத்தைச் சேர்ந்த அண்ணாமலை அய்யா அவர்களைப் பற்றிப் பார்ப்போம். துறவிக்குச் சுவிகாரத் தந்தையா? துறவியை யாரும் தத்து எடுத்துக் கொள்வார்களா? தத்து எடுப்பது என்பது வம்சம் வளர்வதற்குத் தானே? துறவியால் எப்படி வளரும்? என்று நாம் வியக்கலாம். இந்த நிகழ்வு வினோதமானதுதான். ஆனால் உண்மையில் நடந்தது.

அண்ணாமலை அய்யா ஆண்டவரின் சீடர்; அணுக்கத் தொண்டர்; பலகாலமாகப் பாடம் கேட்டவர்; நிர்வாகத்தில் பங்கேற்றவர். அவருக்கு இல்லற வாழ்வில் மக்கட்பேறு சித்திக்கவில்லை. அவருடைய பெற்றோர் வம்சம் வளரவேண்டும்; பிள்ளை கூட்ட வேண்டும் என்று மகன் அண்ணாமலையிடம் வற்புறுத்தியுள்ளார்கள். அவர்களும் "நான் சாமியைக் கேட்டுச் சொல்கிறேன்" என்று கூறினார்கள். .

ஆண்டவரிடம் "சாமி எங்க ஆத்தா அப்பச்சி புள்ளை கூட்டச் சொல்றாங்க! சாமி அதுக்கு அனுமதிக்கணும்" என்று கேட்க, ஆண்டவரோ, "அண்ணாமலை, பிள்ளைதானே கூட்டவேண்டும்" என்னைக் கூட்டிக்கோ; அதற்கென உள்ள பணத்தை எனக்குத்தா; "நித்யகல்யாணி கைலாசநாதர் சன்னதிகள் கட்டப் பணம் வேண்டும், அதற்கு நீ கொடுக்கும் தொகை பயன்படும்" என்று சொன்னார்களாம். குருவின் வார்த்தைக்கு மறு வார்த்தை பேசாத சீடர் ஒப்புக் கொண்டுள்ளார், சீடர் ஒப்புக் கொண்டாலும் பெற்றோர் எப்படி ஒப்புக்கொண்டார்கள். சீலம் மிகுந்தவர்கள். அதனால் தங்கள் மைந்தன் மனம் எதனை விரும்புகிறதோ? எதனால் திருப்தி அடைகின்றதோ? ஒரு மகான் உறவு நமக்கும் வேண்டியதுதானே! அதனை அவன்பெற வேண்டும் என்ற உண்மையான பெற்றோர்கள்.

எனவே ஆண்டவர் கூற்றை அப்படியே ஒப்புக் கொண்டுள்ளார்கள். வம்ச விருத்தியை விடக் குருவின் சொல் வேதம் எனக் கொண்ட சீடர்.

கோவிலூர் மடாலயத்திலே ஆண்டவரைச் சுவிகாரம் செய்து கொள்வது நகரத்தார் மரபு வழி உரிய சடங்குகளுடன் நடைபெற்றதாகத் தமிழ் அறிஞர் சோம.லெ. அவர்கள் குறிப்பிடுகிறார்கள். அண்ணாமலை அய்யா கொடுத்த தொகையால் கைலாச நாதர் நித்யகல்யாணி சன்னதிகள் கட்டப்பட்டன.

அப்படி மகோன்னதக் குணம் கொண்ட அண்ணாமலை அய்யா நமது பரம்பரையின் முன்னோர் என்று சொல்வதிலே பெருமகிழ்வு அடைகிறோம். கோவிலூர் மடாலயத்தின் மடாதிபதியாக நாம் ஆவதற்கு அண்ணாமலை அய்யா பரம்பரை என்பதும் அவர்கள் செய்த புண்ணியத்தாலும் அருந்தவத்தாலும் கிட்டியது இந்தப் பொறுப்பு என்பதும் சிந்தனைக்குரியது.

சற்குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் ஆண்டவர்க்குப் பிறந்த இடத்துப் பேரன். நாம் பிள்ளை வந்த இடத்துப் பேரன்.

இனிமேலும் வீரர்களும் பேரன்களும் தொடர்ந்து வருவார்கள். கோவிலூர் மடாலயத்தின் தொண்டின் பரப்பையும் சிறப்பையும் உலகெங்கும் பரப்புவார்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

*(தொடரும்...)*

# மடாலய நிகழ்வுகள்

16.02.2015 அன்று நல்லூர் பழனி முருகன் ஐயா குருபூஜை சிறப்பாக நடைபெற்றது.

20.02.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் ஆண்டு விழா சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்து.

28.02.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் அழகப்பா அரசு கலைக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் மா. சிதம்பரம், மூர்த்தி நாயனார் பற்றிச் சிறப்புரையாற்றினார்.

04.03.2015 அன்று ஸ்ரீ ராமனாத சுவாமிகள் குருபூஜை காளையார்கோவிலிலும் 10.03.2015 அன்று காரைக்குடி ஸ்ரீமத் சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகள் குருபூஜை கோவிலூரிலும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

08.03.2015 முதல் 14.03.2015 வரை சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை சார்பில் ஊடகத்துறை, புகைப்படத் துறைக் கலைஞர்களுக்கான நவீன தொழில் நுட்பப் பயிற்சி வகுப்பு மடாலய வளாகத்தில் நடைபெற்றது. பாரதிராஜாவின் 23 திரைப்படங்களில் ஒளிப்பதிவாளராகப் பணியாற்றிய திரு.பி. கண்ணன் மற்றும் ஒளிப்பதிவாளர் அழகிய மணவாளன் ஆகியோர் ஒளிப்பதிவு, படத்தொகுப்பு, ஒலிப்பதிவு பற்றிய பயிற்சிகளை வழங்கினர். தேசிய விருது பெற்ற இயக்குனர் திரு.பி. லெனின் மற்றும் திரு. இ.எம். அருண் ஆகியோரும் பிரசாத் ஸ்டுடியோ ஒலிப்பதிவுக்கூடப் பொறியாளர் திரு. யுவராஜ் மற்றும் ஒலிப்பதிவுப் பொறியாளர் திரு. தாமஸ் கொரியன் ஆகியோரும் இப்பயிற்சி முகாமில் கலந்து கொண்டவர்களுக்கு ஒலிப்பதிவு முதலான பயிற்சிகளை வழங்கினர்.

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்